13th September 1958]

SRI V. SANKARAN : மற்ற நகரங்களிலும் டாக்ஸிகளுக்கு மீட்டர் வைக்க வேண்டுமென்று சர்க்காரிடத்தில் ஏதாவது யோசனை இருக்கிறதா ?

THE HON. SRI V. RAMAIAH : தனிக் கேள்வி வேண்டும்.

SRI N. K. PALANISWAMI : முதலில் இந்த மாதிரி மீட்டர் வைக்கவேண்டிய அவசியமில்லை என்று அரசாங்கம் உத்தரவு போட்டதன் காரணமென்ன ?

THE HON. SRI V. RAMAIAH : எந்தச் சமயத்திலும் அம்மாதிரி உத்தரவு போடவில்லை.

*Films*

*217 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Home be pleased to state whether this Government have recommended to the Government of India to restrict the maximum length of the cinema films to 14,000 feet?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : No, Sir.

SRI A. A. RASHEED : In view of the acute shortage of raw films in the country, will the Government restrict the length of films shown?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I may tell the hon. Member that the sanctioning of films for exhibition is a Central subject. Certification of films is done by a Board of Film Censors appointed by the Government of India and I may further tell the hon. Member that the Government of India have no such idea of restricting the length of films.

*Government Hospital, Gudiyatham*

*219 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN: கனம் ரெவினியு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

வட ஆற்காடு ஜில்லா, குடியாத்தம் கவர்ண்மெண்ட் ஆஸ்பத்திரியில் 1947 முதல் 1957 வரையில் ஒவ்வொரு வருடமும் (i) எத்தனை நோயாளிகள் (in-patients) இருந்தனர் ?

(ii) எத்தனை நோயாளிகள் ( out-patients ) வந்தனர் ?

(iii) எத்தனை படுக்கைகள் இருந்தன?

**THE HON. SRI M. A. MANICKAVELU : (i) to (iii) A statement[a] is placed on the table of the House.**

SRI V. K. KOTHANDARAMAN : ஸார், இங்கே கொடுக்கப் பட்டிருக்கிற விபரங்களிலிருந்து குடியாத்தம் ஆஸ்பத்திரியில், 1947-ல் இன்பேஷன்ட்கள் 1,381 என்றும், 1937-ல் 3,205 என்றும் காணப்படு கிறது. இது நான்கு மடங்காக அதிகரித்திருக்கிறது. அதே மாதிரி அவுட் பேஷன்ட்கள் 1947-ல் 64,918 என்றும் 1957-ல் 24,660 என்றும் அறிவிக்கப்பட்டிருக்கிறது. இவ்விதம் 10 வருடங்களில் நான்கு மடங்காக அதிகரித்திருக்கிறது. ஆனல் அங்கே இருக்கிற டாக்டர்கள்,

---

[a] **Printed as Appendix II on page 873 infra.**